[18th February 1959

*Housing Scheme for Valavanur Police Constables*

475 *Q.*—SRI A. GOVINDASAMY : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) வளவனூர் போலீஸ் கான்ஸ்டேபிள்களுக்கு வீடு கட்டுகிற திட்டம் ஏற்பாடாகியிருக்கிறதா ?

(ஆ) அப்படியானால் எப்பொழுது அமுலுக்கு வரும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No Sir

(*b*) Does not arise.

SRI A. GOVINDASAMY : வளவனூரில் உள்ள ஸப் இன்ஸ்பெக்டர், கான்ஸ்டேபிள்கள் இவர்களெல்லாம் வீடு இல்லாத நெருக்கடியால் கஷ்டப்படுகிறார்கள். அவர்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கும் திட்டத்தைப் பற்றி அரசாங்கம் ஆலோசித்து, அந்தத் திட்டத்தை வருகின்ற பட்ஜெட்டிலாவது சேர்ப்பார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வீடு கட்டிக் கொடுக்கும் திட்டம் நிறைவேற்றப்பட்டு வருகிறது. இப்பொழுது யோசனையில் இல்லை என்று சொன்னேனே தவிர, நிதி நிலைமைக்கு ஏற்றவாறு இதெல்லாம் ஒவ்வொன்றாக எடுத்துக்கொள்ளப்படும்.

*Khadi*

* 476 *Q.*—SRI P. G. MANICKAM : உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) 1958–59-ம் வருஷத்திலே சென்னை அரசாங்க காதி (Khadi) இலாகாவுக்கு ஒதுக்கப்பட்ட தொகையிலே 1958-ம் வருஷக் கடைசி வரைக்கும் செலவழிக்கப்பட்ட தொகை எவ்வளவு?

(ஆ) எத்தனை ரூபாய்கள் மதிப்புள்ள கதர் துணிகள் விற்பனை செய்யப்பட்டன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The Budget Estimate for 1958-59 was Rs. 253·13 lakhs which was revised to Rs. 138·03 lakhs in the revised estimates for 1958-59. The expenditure incurred up to the end of December 1958 was Rs. 84,89,416.

(*b*) The value of Khadi sold during 1958-59 (up to December 1958) was Rs. 49,57,920·80.

SRI P. G. MANICKAM : இந்த நூற்பு வேலை செய்வதற்கான வாய்ப்புகள் எத்தனை தொழிலாளிகளுக்கு இதன் மூலம் கிடைத்தன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதுபற்றி தனியாக கேள்வி கேட்டால், விவரம் சொல்லலாம்.

*Harijan converts*

* 477 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state the significance of the statement that " Harijan Converts will be treated as Backward Classes for the purposes of Scholarships for Law Course " in Notification II issued by the Director of Harijan Welfare in the *Fort St. George Gazette, dated* 11*th June* 1958?

THE HON. SRI P. KAKKAN : Prior to 1951 Scheduled Caste converts were not given scholarships from the Harijan Welfare Department for Law Course. They are given scholarships from